[30th June 1962

**திரு. க. கோமதி சங்கர தீக்ஷிதர் :** *தலைவர் அவர்களே! எங்கள் பக்கத்தில் திருவாடுதுறை மடத்தில் பயிர் செய்யும் விவசாயிகள் ஆயிரக்கணக்கான ரூபாய் பணத்தைக் கொடுத்து பயிரிடும் உரிமையை வாங்கி நிலத்தில் இருந்து அப்புறப்படுத்துகிறார்கள். இதில் மடத்து அதிகாரிகளும், மற்றவர்களும் சம்பந்தப்பட்டு இருக்கிறார்கள். ஆகவே விவசாயிகளுக்குப் பாதுகாப்பு அளிக்கும் வகையில் உடனடியாக இந்தச் சட்டத்தை அமுல் செய்யும்படி கனம் மந்திரி அவர்களை நான் கேட்டுக் கொள்கிறேன்.*

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** *இந்தச் சட்டம் கூடிய சீக்கிரம் அமுலுக்குக் கொண்டுவரப்படும் என்று நான் கூறினேன்.*

**அணைகட்டுதல் (அய்யம்பாளையம்)**

*** 61 கேள்வி.—திரு. வ. ச. சு. மணி :** *கனம் விவசாய அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—*

*மதுரை மாவட்டம், திண்டுக்கல் வட்டம், அய்யன்பாளையம் மலையடிவாரத்தில் இருந்துவரும் நதியின் தண்ணீரை அணை கட்டி தேக்கி பாசனவசதி செய்ய அரசாங்கத்திற்கு உத்தேச முண்டா ?*

THE HON. SRI P. KAKKAN : There is no such proposal, Sir.

**திரு. வ. ச. சு. மணி :** *இந்த அணைக்கட்டுத் திட்டமானது 1957-ல் வந்தது. என்ஜினியர் முதற்கொண்டு இதைப் பரிசீலனை செய்து இதனால் ஆயிரக்கணக்கான ஏக்கரா நிலம் சாகுபடி செய்ய முடியும் என்று சொல்லியிருக்கிறார்கள்.*

MR. SPEAKER : The hon. Member may please put his supplementary in the form of a question, instead of making a speech.

**திரு. வ. ச. சு. மணி :** *1957-ல் கொண்டுவந்த திட்டம் என் கைவிடப்பட்டது என்று கேட்க விரும்புகிறேன் ?*

**கனம் திரு. பூ. கக்கன் :** *நான் சொன்ன பதிலில் அத்தகைய ஒரு திட்டமே கிடையாது என்று சொன்னேன். கைவிடப்பட்டது என்று சொல்லவில்லை.*

**திரு. வ. ச. சு. மணி :** *அந்தமாதிரி ஒரு திட்டம் 1957-ல் இருந்தது . . .*

**கனம் சபாநாயகர் :** *அதைக் குறித்து நீங்கள் எழுதி அனுப்புங்கள்.*

*Sandalwood trees (Salem)*

* 62. *Q.*—SRI V. SANKARAN : Will the Hon. the Minister for Co-operation be pleased to state—

(*a*) whether the sandalwood trees in the forest of North Salem have been attacked by any disease; and